# சீவாரஜ்

1957 மே 19

★

7 நயா பைசா



(1) விமானக் கல்லூரியினின்று விமானம் ஓட்ட கற்று வெளிவரும் பாரதர்.

(2) பயிற்சிக் காட்சியில் ஒன்று.

மனோரஞ்சிதம்

# பொன்னும் புகழும்

சஞ்சாரன்

"பொன் கிடைக்கும், புகழ் கிடைக்காது" இப்படி ஒரு கருத்து.

புகழ் கிடைக்க எவ்வளவு பொன்னையும் செலவிடலாம் ....இப்படியும் ஒரு கருத்து.

பொன்னொடு புகழும் கிடைத்தால்—இதுவும் ஒரு கருத்து

புகழோடு பொன்னும் சேர்ந்தால்—இது பெருங் கனவு.

உலகம் முழுவதும் சாதாரண மனிதன் முதல், மத குருக்கள் வரை இந்த இரண்டையும் வெறுத்துத் தள்ளாதவர்கள், சற்று ஊன்றிப் பார்த்தால் பொன்னின் சேர்க்கைக்கு ஒப்பாகவே புகழின் சேர்க்கை அதிகம். கோவிலின், மசூதியின், சர்ச்சின், மதிப்பு அதற்குள்ள சொத்து மதிப்பு, பொன்னிலிருந்து சக்தியே வருகிறது. பொன்னைப் போலவே சக்தியை உற்பத்தி செய்வது புகழ். இக்காலத்தில் மட்டுமன்று, எக்காலத்தும் பணம் சிருஷ்டிக்கும் சக்தியானது கடவுள் சக்தியையும் வென்றுவிடும்.

இயற்கை தந்த பசுமையும் இனிமையும், செயற்கைக் கடவுளான பணம் மாற்றும். இயல்பாக பள்ளத்தை நோக்கிப் பாயும் தண்ணீர் பண பலத்தால் மேட்டுக்கு ஏறும். வாடி வதங்கி அழுகவேண்டிய பழம் 'பதம்' கெடாமல் குளிர் பெட்டிகளில் அடங்கிக் கிடக்கும்! பணக்கடவுள் தருகின்ற சேவைகளுக்கு எல்லை காட்டுவது இயலாது.

விஞ்ஞானம்...அறிவு—தந்த செல்வங்களைப் பணத்திற்குப் பலியிடுகிறேன் என்று எண்ணவேண்டாம். மருந்து, அச்சகம், உணவு, இத்தனையும் விஞ்ஞானத்தின் தயவால் மக்கள் குலத்திற்காகக்கண்டு பிடிக்கப்படுகின்றன. அறிவின் வளர்ச்சியை ஒரு சில காலத்திற்குள், பணத்தின் வலைக்குள் பிடித்துப்போட்டு, கல்யாணமான பெண்ணுக்கு வளர்த்தவன் பெருமை இல்லாது போவதுபோல, பணம் எல்லா அறிவுப் பொருள்களையும் தனதாக்கிக்கொள்கிறது. இதுதான் பணம் செய்கின்ற நன்மை என்கிறார்கள் ஒரு சாரார்; பெரிய தீமை என்கிறார்கள் மறு சாரார்; பொருளாதாரத் தத்துவங்களும், விளக்கங்களும் படித்தவர்கள் பணக்காரர்களாகி விடவில்லை! பெரும்பாலும் ஏழைகளாகவே இருக்கிறார்கள். ஆனால் பொருளாதார நூல் பற்றி எவ்வித 'அனா'வும் தெரியாத சூரர்கள் பணக்கோட்டை கட்டுகிறார்கள். பணத்திற்கும் படிப்பிற்கும் சம்பந்தம் இல்லை.

காரணம் மிகவும் அற்பம். அறிவாளி தன் அறிவைப் பெருக்கிக்கொள்ளவே ஆசைப்படுகிறான்; பணக்காரன் தன் பணத்தைப் பெருக்கிக் கொள்ளவே பேராசைப்படுகிறான். பணக்காரன் முயன்றால் அதிகப் பணம் சம்பாதிக்கத் துணைநிற்கும்; அதன் பரிமாணம் அளவு இவ்வளவென அளவிட எட்டு, இலக்கம் (கோடி) வரை இருக்கிறது. ஐயோ! அறிவை அளவிட பண்பென்ற துலாக்கோலைத் தவிர வேறு என்ன அளவுகோல் இருக்கிறது? அதனால் பணக்காரர்களுக்கு தத்தம் சேமிப்பு எவ்வளவெனத் தெரியும். அறிவாளிக்குத் தன் அறியாமை எவ்வளவெனத் தெரியும். இதனால்தான் கலைமகளும்—மலைமகளும் ஒரே இடத்தில் சேரமாட்டார்கள் என்ற வாக்குப் பிறந்தது.

—அறிஞன் பணத்தை விரும்பாமலும். பணக்காரன் அறிவின் தொகுப்பை விரும்பாமலும் வாழ்க்கை நடத்துவார்கள் என்பது சூசகம்.

இன்று உலகத்தில் பொன் படைத்தவர்களை விடப் புகழ் படைத்தவர்களையே மதிக்கிறார்கள். பொன் படைத்தவர்கள் உள்ளூரில் மதிக்கப்படுவார்கள். கற்றோருக்குச் சென்ற விடமெல்லாம் புகழ். கடல்தாண்டியும் புகழ்பெறக் கப்பல் ஏறவேண்டுவதில்லை; அறிவு கடலை மட்டுமா கால வெள்ளத்தையும் நீந்திக்கரை சேர்க்கும். பணம் அவனோடு பிறந்து அவனோடு மறையும்; புகழ் அவனோடுபிறந்து அவன் மறைந்தும் தான் மறையாது நிற்பது. பொன்னைவிடப் புகழ் பெரிது. பொன் பெற்றப் பணக்காரர்களை அவர்கள் செய்யும் தருமத்தால் உலகம் அறியலாம். எவ்விதமான தருமமின்றி, பிரயாணச் செலவின்றி இருந்த இடத்திலேயே தன்னைத் தெரிவித்துக் கொள்ளும் வானொலி நிலையம் போல் புகழ் ஒன்றே துணை. புகழின் சக்தி பெரும்பாலும் ஞான தானத்தால், அறிவு தானத்தால் வருவது.

எனவே, பணக்காரர்கள் ஏழைகளை ஏய்த்து அல்லது சுரண்டி லாபம் அடைந்து தங்களைப் பணக்காரர்கள் ஆக்கிக்கொள்ளலாம்' சுயமுயற்சியால் புகழ்பெற இருக்கிறானே அவனோடு மீட்டும் போட்டியிட்டு புகழையும் சுரண்ட வருகிறார்கள். இதிலுள்ள ரகஸ்யம் பொன்னைச் சேமிப்பதுபோல புகழைச் சேமிப்பது எளிதன்று. பணக்காரர்களுக்குப் புகழ் தேடும் ஆசையில்லாது போனால் இதைவிட மிகக் குறைவான தருமங்களே நடைபெறும். மிகக் குறைவான பொதுநலங்களே பிறக்கும். இடக்கைக்குத் தெரியாது வலக்கையால் தருமம் செய்பவர் அருகிப் போவார்கள்

ஆண்டவன் சந்நிதியில் மூன்றடி வாழைத்தண்டு விளக்கில் உபயம் பொறிக்கிறார்கள், கல்லுக்குக் கல் செதுக்குகிறார்கள்; கல்யாண வீடுகளில் ஒரு ரூபாய் அரை ரூபாய் சீர் வகையை மைக்கில் அலறுகிறார்கள்! நாலு அரளியுள்ள பூந்தோட்டம் கட்டிய கர்ணனைக் கொடையாளியென அஸ்திவாரக்கல்லில் காட்டுகிறார்கள் பாலத்தைத்திறந்து வைத்தவர்! தமது பெயர் நிலைத்து நிற்க, காலவெள்ளத்தில் பாலமிடுகிறார். ஆற்றுக்குப் பாலமல்ல! அவர் புகழுக்குப் பாலம்!!

புகழ் கிடைக்கப் பொன்னைச் செலவழிப்பவர்கள் மிகப்பலர்-மிகமிகப்பலர்.

பொன்னோடு புகழும் கிடைத்தால்? பொன்மலர் வாசனை பெற்ற பெருமை வரும். பொன்னைச் செலவு செய்யாமலே புகழ் பெறவேண்டும். உதாரணம் பாருங்கள். சிறுகதைப் போட்டி ஒன்றிலே டால்மியா, பிர்லா. ஜி. டி, நாயடு. சர். சி. வீ. ராமன். ராஜேந்திர் பிரசாத், ஐஸன் ஹோர்வர், புல்கானின், ரீடா ஹேவொர்த் இன்னோரன்னவர்கள் எழுதிக் கலந்துகொள்ளுகிறார்கள் என்று வந்தால்? அந்தப் போட்டிக்கு எத்துணை புகழ் வரும். அதை வெளியிடும் பத்திரிகை பொன்மலையாகக் குவிந்துவிடும்.

பொன்மலை இல்லாத காரணத்தால். ஏழைக் கலைஞர்கள், விஞ்ஞானிகள் நீடித்து நிற்கும் பணியைச் செய்கிறார்கள், குறிப்பாக வியாபாரம் செய்வதில்லை; சிருஷ்டி ஆண்டு பிடிப்பு போன்ற அற்புதங்களை நிகழ்த்துகிறார்கள்.

(12ம் பக்கம் பார்க்க)

இப்பொழுது அரசாங்கம் பல வகைகளிலும் ஜன முன்னேற்றத்தை கருத்தில் கொண்டு செயலாற்றி வருகிறது. முன்னேற்றம் என்ருல் ஜனங்கள் ஒவ்வொருவரும் சுறு சுறுப்புடன் வேலை செய்தல் வேண்டும். பணமுள்ளவர்கள் தங்கள் திரவியத்தை தாராளமாகப்போட்டு பலவித தொழிற்சாலைகளும் விவசாய பண்ணைகளும் நிறுவல் வேண்டும். எதன் பொருட்டு என்ருல், நமது தேசத்தில் வேலையற்றிருக்கும் பல கோடி மக்களுக்கு வேலை கொடுக்கும் பொருட்டு. அவர்களுக்கு வேலை கொடுத்தால் மட்டும் போதுமா? தகுந்த சம்பளமும் கொடுக்க வேண்டும். இவ்வளவும் ஒரே காலத்தில் செய்துவிட முடியுமா? ஒவ்வொருவரும் தன் சக்திக்கு ஏற்றவாறு இந்த வகையில் செயல் புரிய முற்பட வேண்டும். தனித்தனியே செயல் புரியபோதிய பணம் ஒருவரிடத்தில் இல்லாத காலத்தில், பலரும் ஒன்றுசேர்ந்து பல புதியவழிகளில் தொழிற்சாலைகள் அல்லது விவசாய பண்ணைகள் அல்லது வர்த்தகம் செய்ய முற்படல் வேண்டும். சிற்சில சமயங்களில் அரசாங்கமே (நமது அரசரங்கம் இப்பொழுது செய்ய முற்பட்டிருப்பது போல) பல தொழிற்சாலைகளை கோடிக்கணக்கான முதல் போட்டு ஆரம்பிக்க சாத்தியமாக இருக்கிறது. இன்னும் ஜனங்களின் சுகாதாரம் படிப்பு பிரயாணம் முதலிய எல்லா வகைகளிலும் நம் தேசத்தில் முற்போக்கு அடைய வேண்டியிருக்கிறது. இவைகளுக்கெல்லாம் பணம் இல்லாமல் என்ன முடியும்? பொதுஜனங்களும் வியாபாரிகளும் தொழிற்சாலையாளர்களும் தானே இவ்வளவிற்கும் அரசாங்கத்திற்கு பணம் கொடுக்க வேண்டியிருக்கிறது. இவ்வளவையும் நாம் அறிந்து ஒருவருக்கொருவர் சுமுகமாக பேசி நம்மையும் உயர்த்திக் கொண்டு அரசாங்கத்திற்கும் உதவியாய் இருக்க செயல் புரிய முதலில் நம்முள் ஒற்றுமை வேண்டும்.

தேசத்தின் முன்னணியில் நிற்கும் வர்த்தகர்களாகிய நாமே ஒற்றுமையின் மேன்மையை தெரிந்து கொள்ளாவிடில் பொது ஜனங்கள் எப்படி அறிந்து கொள்வார்கள்.

# வியாபாரிகள் சிந்திக்க

திருச்சி மில் ஜவுளி வியாபாரிகள் சங்கத்தில் 18—5—57 உ சங்கத் தலைவர் பி. ரா. நாராயணசாமி அய்யர் செய்த சொற்பொழிவின் சுருக்கம்,

—.—

இந்த வகையில் நாமே தேச மக்களுக்கு வழி காட்டியாக இருக்க வேண்டும்.

உதாரணமாக, சர்க்காருடன் போராட நம்முள் ஒற்றுமை தேவை என்று வர்த்தகர்கள் சொல்லுகிருர்கள். அப்படியல்ல. சர்க்கார் நமதுசர்க்கார். பொது ஜனங்களின்நன்மையை நாடியே பல காரியங்களையும் செய்கிறவர்களாக இருக்கிருர்கள். அப்படியிருக்க நமக்கு போராட்ட மனப்பான்மை ஏன்?

முன்பு ஆங்கிலேயர்கள் தம் இனத்தவர்கள் இங்கு வந்து சேவை செய்யும் ஊதியமும், பல கோடிக்கணக்கான ரூபாய்களுக்கு தமது சாமான்களை விற்று அதற்கென கொண்டு போன பணமும், நமக்கு இப்பொழுது மிச்சமாகிறது. சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் சம்பளத் தொகை பூராவும் தேசத்திலேயே இப்பொழுது தங்குகிறது. ஜவுளி வியாபாரத்தை எடுத்துக் கொள்வோம். நமது தேசத்தில் முன் நாட்களில் நாம் உடுத்தும் உடைகள் பெருவாரியாக மேனாட்டிலிருந்து வந்து கொண்டிருந்தது. இப்பொழுது நம் தேவை பூராவும் நம் நாட்டில் தயாரிக்கப்படுகிறது. இன்னும் மேற்கொண்டு பல நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்து கொண்டு வருகிறோம். இம்மாதிரியே இரும்பு விஷயத்திலும். இந்த இரண்டாவது மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அதாவது இன்னும் 10 ஆண்டுகளில் நமது தேவை பூர்த்தி செய்யப்படும். மேற்கொண்டு வெளி தேசத்திற்கும் அனுப்பப்படலாம். சிமெண்ட் ஏராளமாக தயார் ஆகிக்கொண்டு வருகிறது. ஆயினும் நம் தொழிற்சாலைகளுக்கும் பொதுஜன உபயோகத்திற்கும் போதியவையாக இல்லை. இந்த இரண்டாம் ஐந்தாண்டு திட்டத்தில் பூர்த்தியாகி விடலாம். உணவு தான்யங்கள் உற்பத்திக்கு ஜல வசதியில்லாத இடங்களுக்கு கால்வாய்கள் வெட்டப்பட வேண்டும். பல கிராமங்களுக்கும் தண்ணீர் வசதி செய்து கொள்ள, விவசாயத்திற்கும் ஜனங்களின் உபயோகத்திற்கும் மின்சார வசதி செய்து கொடுக்க வேண்டும். சுகாதாரம் மூதலிய பொது ஜனத் தேவை கவனிக்கப்பட வேண்டும். இரயில்வே வசதிகள் ஏராளமாக செய்ய வேண்டும். ஜனங்களுக்கு படிப்பு வேண்டும். இவையெல்லாம் ஒரு நாளில் செய்து விடக் கூடிய வை அல்ல. பெருவாரியான பணமும் செலவிற்கு வேண்டும். இவைகளுக்கெல்லாம் பணத்திற்கு சர்க்கார் எங்கு போக வேண்டும். வியாபாரிகளிடத்திலும் பொது ஜனங்களிடத்திலும் தான் வசூலிக்க வேண்டும். அதற்குத் தகுந்தபடி நம் தொழிலை அபிவிருத்தி செய்து கொண்டு, நம் அரசாங்கத்திற்கு உற்ற துணைவராக இருக்க வேண்டும். ஜனங்களின் நன் மதிப்பு இருந்தாலே வியாபாரம் விருத்தியடைய முடியும். வியாபாரிகள் செழித்தாலே அரசாங்கம் முன்னேற்றம் அடையும். இக்கொள்கையில் முன்னேற வியாபாரிகள் தங்கள் தொழிலை மட்டும் கவனித்துக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. தேசம் முன்னேற்றம் அடையும் வகையையும் கவனித்துக் கொள்ள வேண்டும். பலர் கூடி சங்கத்தின் மூலம் பல விஷயங்களை விவாதிப்பதாலும் அவ்வப்பொழுது பத்திரிகைகள் வாயிலாக வரும் செய்திகள் மூலமாகவும் பல விஷயங்களை தெரிந்துகொள்வது சாத்தியமாகும். இப்படி பல வருடங்கள் அரசாங்கமும் ஜனங்களும் கைகோர்த்துக்கொண்டு விடாமுயற்சியுடன் உழைத்தால்தான் முன்னேற்றம் சாத்தியமாகும். இன்னும் பல வருடங்கள் வருடா வருடம் முன்னேறிக் கொண்டே வந்தால்தான் நமது தேசத்தில் உள்ள பசிப்பிணி போகும். நம் சகோதரர்கள் நல் வாழ்வு வாழ நாம் பாடு பட்டவர்களாவோம்.

தேச அபிவிருத்தியின் நிமித்தம் சர்க்கார் வரிபோடுவது சகஜம்தான். ஆனால் அவர்கள் போடும் வரி வசூலிக்கும் வகையின்மையால், வர்த்தகர்களுக்கும் அரசாங்கத்திற்கும் போராட்டம் உண்டாக்கும் வகையில் இருத்தல் கூடாது. சில சமயங்களில் ஒரு ராஜ்யத்தில் ஒரு தினுசு வரி மற்றொரு ராஜ்யத்தில் மற்றொரு தினுசு வரியாக இருப்பதால் ஒரு இராஜ்யத்திற்கு மற்றொரு ராஜ்யம் ஜனப்போக்குவரத்து நிமித்தம் வரி வசூலிப்பதில் சிரமம் ஏற்பட்டு அதனால் அரசாங்கத்திற்கும் பொது ஜனங்களுக்கும் போராட்டம் ஏற்படுவது சகஜம். இது இல்லாமல் இருப்பது நலம். நமது ராஜ்யத்திலேயே விற்பனை வரியில் ஒரு வகை. பல ஜில்லாக்களில் பலவிதமாக அனுஷ்டானத்தில் இருப்பது அரசாங்கத்தின் திறமையை சோதிப்பதாகும். பத்து வருடங்களாகத்தான் அரசாங்கம் நம் கைவசம் வந்திருக்கிறது. உலகத்தின் மற்ற தேசங்களைப் போல் நாமும் அபிவிருத்தியடைய வேண்டும் என்னும் ஆவல் கொண்டு அரசாங்கம் பல வழிகளிலும் வரி போட்டேதான் ஆக வேண்டியிருக்கிறது என்பதை நாம் அறிவோம். ஆயினும், சீரான ஆட்சியின் பொருட்டு வரிகள் பல இடங்களிலும் ஒரே சீராக அமைதல் நலம்.

போடும் வரியில் வசூலிக்கும் வகை குறைவு ஏற்படுமேயானல் உண்மை வர்த்தகர்களுக்கோ அல்லது ஜனங்களுக்கோ இதனல் பாதகம் ஏற்படுகிறது. வர்த்தகர் விஷயத்தில் இது மிகவும் பாதிக்கும் தன்மையது. கண்டிப்பாக அரசாங்கம் இதை கவனித்தே தீரவேண்டும்.

நிற்க, நமது சென்னை ராஜ்யம் அளவில் இப்பொழுது சிறியதாக இருந்தபோதிலும் இந்திய அரசாங்கத்தில் இன்னமும் பெருமை வாய்ந்ததாகத்தான் இருக்கிறது. மதராஸ் பலவகைகளிலும் முக்கியத்துவம் அடைந்துவிட்டது. கோயம்புத்தூர், மதுரை ஜில்லாக்களின் அபிவிருத்தியைப் பற்றி சொல்ல தேவையே இல்லை. சேலம் ஜில்லாவும் சொற்ப காலத்தில் மிக முன்னேற்றம் அடைந்துவிடும்.

(12ம் பக்கம் பார்க்க)




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஏடு 22] 19–5–57 [வாரம் 24

## வீர வணக்கம்

1857-ம் ஆண்டில் அன்னிய ஆட்சியை அண்டவிடாமல் தடுக்க இந்த நாட்டில் ஒரு விடுதலை இயக்கம் தோன்றியது. அன்னிய ஆட்சி அந்த விடுதலை இயக்கத்தை அடக்கி ஒடுக்கிவிட்டது.

அந்த இயக்கம் தோல்வியடைந்ததற்கு அன்னியரின் படை பலம் மட்டும் காரணமல்ல. நம்மவர்களின் துரோகச் செயலும், ஒற்றுமையின்மையும் தான் முக்கிய காரணங்களாக இருந்தன.

அன்று ஆரம்பித்த இயக்கம் வெற்றியைத் தரவில்லை யென்றாலும் அந்த எழுச்சியே நமது விடுதலைக்கு வித்திட்டது என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

சுதந்திர பாரதம் விடுதலைக்கு வித்திட்ட வீரர்களின் எழுச்சி உதயமான நூற்றாண்டு விழாவை சிறப்பாகக் கொண்டாடுகிறது. தேசவிடுதலைக்காக உயிர் நீத்த தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்துகிறது.

தன்னலம் கருதாது உழைத்து வீர மரணம் எய்திய அந்த பெருமக்களுக்கு நமது வீர அஞ்சலிகள். நாட்டின் ஐக்கிய பாவத்தை பலப்படுத்தி பாரதத்தை பலப்படுத்துவது ஒன்றே நாம் செய்யும் வீர வணக்கமாகும் அதனை செய்வோமாக.

## பாராட்டுகிறோம்

ஸூயஸ் கால்வாய் சம்பந்தப்பட்ட முட்டில் இந்தியாவின் நேர்மைக் குரல் வெற்றியைத் தேடித் தந்திருக்கிறது. வணங்காமுடி படைத்த வல்லரசாகிய பிரிட்டன் முடி வணங்கி அடிபணிகிறது. எகிப்துவின் நியாயமான உரிமையை ஒப்புக்கொண்டிருக்கிறது. சூயஸ் கால்வாயில் மற்றவர்களைப்போல தானும் எகிப்திடம் வரி செலுத்தி விட்டுச் செல்ல ஒப்புக்கொண்டிருக்கிறது.

இது காலம் கடந்த பிறகு ஏற்பட்ட ஞானோதயமென்றாலும் இப்பொழுதாவது பிரிட்டனுக்கு இந்த விவேகம் வந்ததே என்று பிரிட்டனை பாராட்டுகின்றோம். தனது நியாயமான உரிமையை வலியுறுத்த எகிப்து சற்று அஞ்சியிருந்தாலும் இது சுமுகமாக நிறைவேறியிருக்காது.

சூயஸ்கால்வாய் உரிமைக்காக அன்னியரின்படை எடுப்புக்கு தனது வீரப் பெரு மக்களின் உயிரைப் பணயம் வைத்து அஞ்சாது எதிர்த்து நின்ற எகிப்தின் அதிபர் நாஸருக்கும் அவரது அரசாங்கத்திற்கும் நமது நல்வாழ்த்துக்கள்.



## கணபதிராயன் பேசுகிறான்

சிவகுமாரன்

தராசுக்கடையின் கதவை மெள்ளத் திறந்துகொண்டு கணபதிராயன் உள்ளே பிரவேசித்தான். 'வா, வா, கணபதி,' என்று தராசு முகமன் கூறிற்று.

'எங்கே, நெடுநாளாக ஆளையே காணோமே'? தராசு வினவியது.

'கொஞ்சநாள் மௌனம் சாதித்துப் பார்ப்போமே என்று தோன்றிற்று,' கணபதி பதிலிறுத்தான். தராசு கலகலவென்று நகைத்தது.

'ஏன் சிரிக்கிறாய் தராசே'?

'மௌனம் இருவகைப்படும். ஒன்று ஊமையின் மௌனம், மற்றது ஞானியினுடையது. உன்னுடையது எந்த வகையைச் சார்ந்தது என்று எண்ணிப்பார்த்தேன். சிரிப்பு வந்தது.

'நான் ஊமையல்லவென்பது உனக்குத் தெரிந்தது தான், ஞானியுமல்லன். வெகு சாதாரண மனிதன். எனினும் உள் குரலைக் கேட்கத் தெரிந்த மனிதன். அந்தக் குரலைக் கேட்டுக் கிரகித்துச் சரியான முறையில் வெளியிடும் திறனுடையவனா நான் என்பது வேறு விஷயம்.'

'உனது பேச்சு உள்குரலின் வெளிப்பறை என்ற விஷயத்தில் உனக்கே நிச்சயமிருந்திருக்குமானால் நீ பேசாமலிருந்திருக்கமாட்டாய்.'

'வாஸ்தவம் தராசே! இன்னும் நான் கீழ்ப்படியிலேயே தான் குடியிருக்கிறேன். இந்தச் சமூகத்தின் பொய்ம்மைகள் மாசு மறுவுகள் ஆகியவைகளைக் கடந்து சுலபமாக மேலே எழமுடியாமல்தான் வாழ்கிறேன்.'

'உனக்குத்தான் வினோபாஜி என்றால் மிகவும் பிடிக்குமே! அவர் என்ன கூறுகிறார் தெரியுமா? தராசு கேட்டது.

'என் நினைவிலில்லை தராசே'!

'பேசுகிற பேச்சு உள் குரலின் பிரதிபலனம் என்ற நிச்சயம் ஒருவனுக்கு இருக்குமானால் அவனது வார்த்தைகள் ஈஸ்வர ஜபம் என்று அவர் கூறுகிறார். அதற்கு உதாரணமாகப் பெரிய மாதவராவ் பேஷ்வாவின் கடைசி நாட்களைக் குறிப்பிடுகிறார்.'

'அது உண்மைதான் தராசே. சமீபத்தில்கூட நான் காலடிக்குப் போயிருந்தேன். பூஜ்யர்பேசும்போது கண்களை மூடிக்கொண்டு அவரது மொழிகளின் அர்த்தத்தில் திளைத்தேன். ஆனந்தக்கடலில் ஆழ்ந்தேன். அழுதேன். ஜ்வலித்தேன். அவரது உருவம் மறைந்த பிறகு மறுபடி மண்கட்டியாகிவிட்டேன்.!

'நீ நல்லவன் கணபதி, உனக்குப் பொய் சொல்லத் தெரியவில்லை. நீ கூறியது முற்றிலும் உண்மை.'

'இருக்கலாம் தராசே, எனினும் எனக்கொரு சந்தேகம்'!

'என்ன அது'?

'அண்ணல் காந்தியடிகளுக்கு இருந்த அளவு சக்தி அவரது சீடருக்கு இல்லையோ என்று நான் அடிக்கடி சந்தேகித்து வருகிறேன்'!

'என்ன காரணம்'?

'ஆங்கிலேயர்களை வெளியே அனுப்பும் முயற்சியில் அவரது வாக்குகளை மக்கள் பெருவாரியாகப் பின்பற்றினர்கள். அவர் மூட்டிய செங்கனல் காற்று வேகத்தில் பரவிற்று. இன்று வினோபாஜியின் செய்தி மக்களை நிரந்தரமாகக் கவராததற்கு என்ன காரணம்'?

(12ம் பக்கம் பார்க்க)

தொடர் 17

# எங்கிருந்தோ வந்தான்

## 20. வளரும் பயிர்

கூட்டத்திலே ஒதுங்கி நின்றிருந்த தமிழாசிரியர் மெதுவாக முன்வந்து வளரும் தமிழுக்கு ஒரு வாக்குத் தாருங்கள் என்று கூறி வணங்கி நின்றார்.

அவன் சொன்னான்

யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம்
பாமரராய் விலங்கு களாய் உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழ ரெனக் கொண்டிங்கு
வாழ்ந் திடுதல் நன்றோ? சொல்லீர்
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்
பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்
இறவாத புகழுடைய புது நூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை யில்லை
திறமான புலமையெனில் வெளிநாட்டார்
அதை வணக்கம் செய்தல் வேண்டும்.
யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல், இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை உண்மை
வெறும் புகழ்ச்சி யில்லை.
ஊமையராய் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம் ஒரு சொற்கேளீர்
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்!
என்று கூறிமுடித்தான்



### அமுத வாக்கு

எல்லாம் கடவுள்மயம் என்றுணர்ந்தவன் உலகத்தில் எதற்கும் பயப்படமாட்டான், எங்கும் பயப்படமாட்டான்; எக்காலத்திலும் மாறாத ஆனந்தத்துடன் தேவர்களைப்போல் இவ்வுலகில் நீடூழி வாழ்வான்' என்பது ஹிந்து மதத்தின் கொள்கை. இந்த விஷயங்களெல்லாம் மாணக்கருக்கு தெளிவாக விளங்கும்படி செய்வதுஉபாத்தியாயர்களின் கடமை



### மானந்தகுடி-அய்யம் பேட்டை வி. உ. ஆ. பாடசாலை போஷகர் நினைவு நாள்

விவேகானந்தாஉதவி ஆரம்ப பாடசாலையின்போஷகர், மானந்தகுடி ஸ்ரீ சு.நமசிவாயம்பிள்ளை மூன்றுவது நினைவு நாளை முன்னிட்டு 11-5-57 சனிக்கிழமையன்று மாலை 6 மணிக்கு பேரளம் சப் ரிஜிஸ்ட்ரார் ஸ்ரீ N. சுப்பய்யா பிள்ளை தலைமையில் கூட்டம் நடைபெற்றது. ஆவிடையார்கோவில் ஸ்ரீ M. சித்தாராமன் இறை வணக்கம் பாடினர்.

ஆண்டார்பந்தி ஆசிரியர் மா. அமிர்தலிங்கம் "சிருடைச் செல்வர்" என்னும் பொருள் பற்றி சொற்பொழிவாற்றினர். ஸ்ரீ M. சிதாராமன், பூந்தோட்டம் ஊராண்மைக்கழகத் தலைவர் ஸ்ரீ க. கோ. வீரப்ப பிள்ளை, ஸ்ரீ P. சுப்பிரமணியம், மானேஜர் ஸ்ரீ ச. க. குழந்தைவேலு பிள்ளை ஆகியோர் ஸ்ரீ பிள்ளையின் குணங்களைப் பாராட்டிப் பேசினர். திருக்குறள் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு தலைவர் பரிசுகள் வழங்கினர்.

தலைவர் முடிவுரையில் கிராமங்கள் முன்னேற மக்கள் ஒற்றுமை அவசியம் என்றும், தெய்வ பக்தியின் அவசியத்தை உணர்ந்து ஸ்ரீ பிள்ளையைப் போல் ஒவ்வொருவரும் தர்ம சிந்தனையொடு, குறிப்பாக பாடசாலையை முன்னேறச் செய்யவேண்டுமென கேட்டுக்கொண்டார் தேசிய கீதத்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

—....—

# THE RELIANCE BANK OF INDIA LIMITED, MADRAS.

## BALANCE SHEET AS ON 31ST DECEMBER, 1956

| figures for 31-12-55 | CAPITAL & LIABILITIES | Amount Rs. As. Ps. | Total Rs. As. Ps. |
|---|---|---|---|
| | 1. CAPITAL :— | | |
| | Authorised Capital: 50,000 Shares of Rs. 100/- each ... | | 50,00,000 0 0 |
| | Issued Capital: 5,000 Shares of Rs. 100/- each ... | | 5,00,000 0 0 |
| | Subscribed Capital: 5,000 Shares of Rs. 100/- each | | 5,00,000 0 0 |
| | Amount Called up at Rs. 100/- perShare | 4,85,600 0 0 | |
| | Less: Calls unpaid | Nil | |
| | | 4,85,600 0 0 | |
| ,92,580 | Add: Forfeited Shares | 6,980 0 0 | 4,92,580 0 0 |
| 52,037 | 2. RESERVE FUND AND OTHER RESERVES:— (Including, Reserve of Rs. 43,000/-under section 17 of the Banking Companies Act) | | 58,428 1 10 |
| | 3. DEPOSITS AND OTHER ACCOUNTS:— | | |
| | Fixed Deposits, Cash Certificates, Recurring Deposits and Staff Security ... | 15,51,510 4 7 | |
| | Savings Bank Deposits ... | 4,63,939 10 10 | |
| 1,06,55 | Current Accounts, contingency Accounts | 3,32,061 10 11 | 23,47,511 10 4 |
| | 4. BORROWINGS FROM OTHER BANKING COMPANIES, AGENTS ETC | | |
| | i. In India | 1,37,264 9 11 | |
| | ii. Outside India | Nil | 1,37,264 9 11 |
| | Particulars :— | | |
| | i. Securedby G. P. Notes | 1,37,264 9 11 | |
| | ii. Unsecured | Nil | |
| | | 1,37,264 9 11 | |
| 5,450 | 5. BILLS PAYABLE :— | | 7,196 6 6 |
| 48,218 | 6. BILLS FOR COLLECTION BEING BILLS RECEIVABLE (as per contra) | | |
| | i. Payable in India | 80,162 2 7 | |
| | ii. Payable out side India | Nil | 80,162 2 7 |
| | 7. OTHER LIABILITIES :— | | |
| 3,066 | Unclaimed Dividends | 2,357 7 0 | |
| 27,762 | Interest accrued on Deposits, Cash certificates etc. | 34,144 4 2 | |
| 14,421 | Branch adjustments | 23,765 10 9 | |
| 9,163 | Sundries | 16,421 9 9 | 76,688 15 8 |
| 54,412 | | | |
| Nil | 8. ACCEPTANCES, ENDORSEMENT AND OTHER OBLIGATIONS AS PER-CONTRA | | 9,547 0 0 |
| | 9. PROFIT AND LOSS ACCOUND | | |
| | Profit as per last Balance Sheet | 18,354 1 4 | |
| | Less appropriations: | | |
| | Reserve Fund 3,000 0 0 | | |
| | Contingent Funt 7,014 13 1 | | |
| | Provision for Income tax 6,000 0 0 | | 16,014 13 1 |

| figures for 31-12-55 | PROPERTY & ASSETS | Amount Rs. As. Ps. | Total Rs. As. Ps. |
|---|---|---|---|
| | 1. CASH :— | | |
| 2,34,851 | In hand and with Reserve Bank of India and State Bank of India (including foreign currency notes)... | | 2,78,892 0 2 |
| 1,10,423 | 2: BALANCES WITH OTHER BANKS: in Current Accounts | 81,973 0 6 | |
| 9,950 | In fixed deposits (Staff security investments with scheduled banks) ... | 9,450 0 0 | |
| 1,20,373 | i. In India ... | 91,423 0 6 | |
| | ii. Outside India ... | Nil | 91,423 0 6 |
| Nil | 3. MONEY AT CALL AND SHORT NOTICE ... | | Nil |
| | 4. INVESTMENTS: (AT COST:) | | |
| 8,41,548 | i. Securities of the Central and State Governments and other Trustee Securities including Treasury Bills of the Central and State Governments ( FaceValue Rs. 8,43900/ ) (Face value of ... Rs. 6,60,000/ G. P. Notes deposited with ... other bankers for overdraft facilities) | 8,43,724 0 0 | |
| | ii. Shares fully paid up: | | |
| | Preference | Nil | |
| 8,134 | Ordinary (Market value Rs. 717—3—0) ... | 537 0 0 | |
| | Defered ... | Nil | |
| | iii. Shares Partly paid up ... | | |
| | Preference | Nil | |
| 1,708 | Ordinery (Market value Rs. 1,520/-) | 1,808 12 0 | |
| | Deferred | Nil | |
| | iv. Debentures or bonds | Nil | |
| | v. Other investments | Nil | |
| 8,51,391 | vi. Gold ... | Nil | 8,46,069 12 0 |
| | 5. ADVANCES: (includes Rs. 57,000/-considered doubtful for which provision has not yet been made tothe satisfaction of the Auditors) | | |
| 14,06,085 | 1. Loans, Cash Credits, Overdrafts etc.— | | |
| | i. In India | 17,36,862 6 3 | |
| | ii. Outside India | Nil | |
| | 2. Bills Discounted and Purchased (excluding Treasury Bills of the Central and State Governments.) | | |
| 64,5 45 | i. Payable In India ... | 1,23,715 2 5 | |
| 14,70,630 | ii. Outside India ... | Nil | 18,60,577 8 8 |
| | Particulars of advances | | |
| | 1. Debts considered good in respect of which the Banking Company is fully secured ... | 14,77,614 4 1 | |
| | 2. Debts considered good for which the Banking Company holds no other Security other than the Debtors Personal Security ... | 3,25,963 4 7 | |
| | 3. Debts considered good, secured by the Personal Liability of one or more parties in addition to the personal Security of the Debtors. ... | Nil | |
| | 4 Debts considered doubtful or bad not provided for ... | 57,000 0 0 | |
| | | 18,60,577 8 8 | |
| | 5. Debts due by the Directors or Officers of the Banking Company or any of them either severally or Jointly with any other persons (fully secured) ... | 40,197 9 4 | |
| | 6. Debts due by Companies or firms in which the Directors of the Banking Company are interested as Directors, Partners or Managing Agents, or in the case of Private Companies as members ... Secured 67,609 11 0 Unsecured 8,034 14 5 | 75,644 9 5 | |
| | 7. Maximum Total Amounts of Advances including Temporary Advances made any time during the year to directors or Managers or officers of the Banking company or anyof them either severally or jointly with any other persons | 47,863 15 4 | |
| | 8. Maximum Total Amount of Advances including Temporary Advances granted during the year to the Companies or firms in which the directors of the Banking com | | |

| Particulars | | Rs. As. Ps. | Rs. As. Ps. |
|---|---|---|---|
| 9. PROFIT AND LOSS ACCOUND | | | |
| Profit as per last Balance Sheet | | 18,354 1 4 | |
| Less appropriations: | | | |
| Reserve Fund | 3,000 0 0 | | |
| Contingent Funt | 7,014 13 1 | | |
| Provision for Income tax | 6,000 0 0 | 16,014, 13 1 | |
| | | 2,339 4 3 | |
| Add: Net Profit for the year | | 11,913 14 11 | 14,253 3 2 |
| 10. CONTINGENT LIABILITIES. | | | |
| On partly paid shares of a Bank Rs.250/- | | | |
| Total ... | | | 32,23,632 2 0 |

| Previous year | Particulars | Rs. As. Ps. | Rs. As. Ps. |
|---|---|---|---|
| | 7. Maximum Total Amounts of Advances including Temporary Advances made any time during the year to directors or Managers or officers of the Banking company or any of them either severally or jointly with any other persons | | [illegible] |
| | 8. Maximum Total Amount of Advances including Temporary Advances granted during the year to the Companies or firms in which the directors of the Banking company are interested as directors, partners or Managing Agents or in the case of Private Companies as members ... | | 47,863 15 4 |
| | 9. Due from Banking Companies ... | 84,290 15 11 | |
| | | Nil | |
| | 6. BILLS RECEIVABLE BEING BILLS FOR COLLECTION-(as per contra) | | |
| 48,218 | (i) Payable In india | 80,162 2 7 | |
| | (ii) Payable Outside India | Nil | 80,162 2 7 |
| Nil | 7. CONSTITUENTS, LIABILITIES FOR ACCEPTANCES ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS as per contra ... | | 9,547 0 0 |
| Nil | 8. PREMISES LESS DEPRECIATION: ... | | Nil |
| | 9. FURNITURE & FIXTURES at cost— as per last balance sheet | 20,040 7 7 | |
| | Additions during the year | 1,,656 3 C | |
| | | 21,696 10 7 | |
| 11,339 | Less: Sold | 58 0 0 | |
| | | 21,638 10 7 | |
| | Less: Depreciation up to 31st December 1956 ... | 9,348 2 11 | 12,290 7 8 |
| | 10. Other assets (including Silver) | | |
| 22,968 | Sundries including tax deducted at source | 25,076 7 7 | |
| 10,435 | Books, Forms and Library | 13,081 12 0 | |
| 5,199 | Interest accrued on Investments | 4,810 1 3 | 42,968 4 10 |
| 38,602 | 11. Non Banking Assets acquired in satisfaction of claims | | 1,701 13 7 |
| 1,701 | 12. PROFIT AND LOSS (Old Fund) | | Nil |
| | TotalRs. ... | | 32,23,632 2 0 |

# PROFIT AND LOSS ACCOUNT FOR THE YEAR ENDED 31ST DECEMBER, 1956.

| Figures for 31-12-1955 | EXPENDITURE | Amount Rs. As. Ps. | figures for 31-12-55 | INCOME (Less Provision made during the year for bad and doubtful debts and other usual or necessary provision) | Amount Rs. As. Ps |
|---|---|---|---|---|---|
| 68,990 | 1 Interest Paid on Deposits, Borrowing, etc. ... | 79,005 3 11 | 1,34,894 | 1 Interest and Discount ... | 1,45,309 11 2 |
| 43,972* | 2 Salaries, allowances, Bonus and Provident Fund (including salary, allowance bonus and provident fund to Secretary Rs. 5145/-) ... | 46,607 9 3 | 12,111 | 2 Commission, Exchange and Brokerage ... | 11,411 1 1 |
| | | | Nil | 3 Rents ... | Nil |
| 976 | 3 Directors' and Local Committee Members' fees and Allowances | 2,558 0 0 | 1,311 | 4 Net Profit on sale of Investments Gold and Silver, Land Premises and other Assets (not credited to Reserve or any particular Fund or Account) ... | 825 15 0 |
| 6,338 | 4 Rent, Taxes, Insurance, and Lighting, etc. ... | 6,647 8 0 | | | |
| 360 | 5 Law Charges ... | 250 0 0 | | | |
| 3,207 | 6 Postage, Telegrams Telephones and Stamps ... | 3,802 10 0 | | | |
| 400 | 7 Auditor's Remuneration ... | .650 0 0 | Nil | 5 Net Profit on Revaluation of Investments, Gold and Silver Land, Premises and other Assets (not credited to Reserve or any Particular Fund or Account) ... | Nil |
| 597 | 8 Depreciation and Repairs to Banking Company's Property ... | 646 13 10 | | | |
| 6,778 | 9 Stationery, Printing and Advertisment. etc. ... | 5,116 9 9 | | | |
| Nil | 10 Loss from sale of or dealing with Non-Banking Assets ... | Nil | 82 | 6 Income from Non Banking Assets or profit from sale of or dealing with such assets. ... | 71 0 0 |
| 4,178 | 11 Other Expenditure ... | 2,932 9 3 | 2,035 | 7 Other Receipts ... | 2,513 3 8 |
| 14,638 | 12 Balance of Profit ... | 11,913 14 11 | Nil | 8 Loss ... | Nil |
| | Total Rs. ... | 1,60,130 14 11 | | Total Rs. ... | 1,60,13o 14 1 |

G. Swaminathan, Secretary.

N. S. AR. Arunachalan Chettiar, G. J. Venkatachary, O. A. O. K. CT. Lakshmanan Chettiar, RM. MV. Muthiah Chettiar, G. Srinivasa Rao, SM. RM. MR. Murugappa Chettiar } *Directors.*

AUDITOR'S REPORT: We have audited the attached Balance Sheet of the RELIANCE BANK OF INDIA LIMITED. MADRAS as at 31st December 1956, and also the foregoing Profit and Loss ount of the Bank for the year ended on that date, with the books of Head Office and Branches. In accordance with the provisions of Section 29 of the Banking Companies Act, 1949, read with provisions to Sub-sections(1) and (2) of Section 211 and sub-sections (5) of Sections 211 and 227 of the Companies Act, 1956 the Balance Sheet and the Profit and Loss Account are not required e and are not, drawn up in accordance with the Sixth Schedule to the Companies Act, 1956, they are therefore, drawn up in conformity with Forms A and B of the Third Schedule ot the Banking npanies Act 1949. We report that (a) We have obtained all the information and explanations which to the best of our knowledge and belief were necessary for the purpose of our audit and have d them to be satisfactory. (b) the transactions of the Bank which have come to our notice have been within the powers of the Bank. (c) in our opinion proper books of account as required by law e been kept by the Bank so far as appears from our examination of those books. (d) the Bank's Balance Sheet and Profit and Loss Account dealt with by this Report are in agreement with the ks of account. (e) in our opinion and to the best of our information and according to the explanations given to us, the said accounts give the information required by the Companies Act, 1955 in manner so required for banking companies and on such basis the said Balance Sheet gives a true and fair view of the state of the affairs of the Bank as at 31st December 1956 and the Profit and s Account gives a true and fair view of the profit for the year ended upon that date.

ndian Chamber Buildings" Esplanade, Madras, }
25th March 1957

S. Viswanathan
*Chartered Accountant*

‘ஸ்சார்’

‘என்ன விஷயம்?’

‘இன்று கந்த முதலித்தெருவில் 25ம் நம்பர் வீட்டில்சாராயம் காய்ச்சுவதாக விஷயம் எட்டியிருக்கிறது.

‘எப்படித் தெரியும்?’

‘நான் எனது நண்பர் ஒருவரைப் பார்க்கச் சென்றிருந்தேன் அப்பொழுது அந்த தெரு ஆசாமிகள் இருவர் பேசிக் கொண்டிருந்தனர்’ என்றேன்.

‘சரி, இன்று இரவு போவோம், தாங்களும் தயாராய் இருங்கள் என்று கூறிவிட்டுச் சென்ருர் சப்இன்ஸ்பெக்டர்.

‘சரி’

என்னை திருச்சி போலீஸ் நிலயத்தில் ஸி. ஐ.டியாக நியமித்திருந்தனர். நான் அதற்கு முன் எங்கெல்லாமோ ஸி. ஐ. டியாக பணியாற்றி வந்தேன். முடிவில் திருச்சிக்கு வந்து ஆண்டுகள் ஐந்து கழிந்து விட்டன. இன்று வரை எவ்வளவோ கேஸ்கள் பிடித்துக் கொடுத்திருக்கிறேன்.

மாலை வேளை

‘என்ன சுந்தரலிங்கம் போகலாமா?’ என்ருர் சப் இன்ஸ்பெக்டர் ராஜ்

# ‘கொலையாளியின் மகள்’

**தஞ்சை பி. வி. ராமன்**

அவர் பெயர் துரைராஜ். ஆனல் எல்லோரும் அவரை சுருக்கமாக ராஜ் என்றுதான் அழைப்பதுண்டு.

நானும் ‘சரி’ என்றேன்.

ஒரு போலீஸ் ஜீப்பில் நானும், சப்இன்ஸ்பெக்டரும் நான்கு ஐந்து போலீஸ்காரர்களும் சென்ருேம். குறிப்பிட்ட இடம் வந்தவுடன் வண்டியை சப்தம் செய்யாமல் நிறுத்தினுன் டிரைவர். ஆம்! அந்த டிரைவர் எங்களுக்கு மேல் சாமர்த்தியசாலி. சட்டென்று போலீஸ் ஜவான்கள் அந்த இடதத்தை வளைத்துக் கொண்டனர். சப்இன்ஸ்பெக்டரும்,நானும் இரண்டு ஜவான்களும் உள்ளே சென்ருேம்.

உள்ளே சாராய வாடை அடித்துக் கொண்டிருந்தது. அதைச் சுற்றி ஏழெட்டு நபர்கள் உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

‘என்னப்பா நின்று கொண்டிருக்கிறீர்கள். அழைத்துச் செல்லுங்கள்’ என்ருர் சப் இன்ஸ்பெக்டர். அதன் பேரில் போலீஸ் ஜவான்கள் இரண்டு இரண்டு பேராக கட்டி அழைத்துச் சென்றனர். அவர்களை தொடர்ந்து காவலாக இரண்டு ஜவான்களும் சென்றனர்.

அந்த சாராயத்தைஎடுத்து ஜீப்பில் வைத்துக்கொண்டு எங்கள் ஜீப்பும் அவர்களை பின் தொடர்ந்தது. தெருவெல்லாம் தலை குனிந்த வண்ணம் சென்று கொண்டிருந்தனர் அந்த நபர்கள். ஆம்! கஷ்டப்பட்டு போலீசார் துணை கொண்டு அழைத்துச் செல்லும் பொழுது எந்நிலையில் இருப்பார்கள்?

ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்ருேம்.

நானும் சப்இன்ஸ்பெக்டரும் அறையில் உட்கார்ந்து கொண்டிருந்தோம். சாராய பிரச்னையைப்பற்றிய விவாதம் வந்தது,

‘சோற்றுக்கே லாட்டரி இந்நிலையில் சாராயம் ஒன்று தான் குறைச்சல்’ என்ருர் சப்இன்ஸ்பெக்டர்.

‘ஆமாம்’ என்றேன் நானும்.

திடீரென்று ‘சுந்தரலிங்கம்’ என்ருர்,

‘என்ன?’ என்றேன்.

‘நான் ஒரு விஷயம் கூறப் போகிறேன். அந்த விஷயம் தங்களுக்கு தெரிந்திருக்காது ஏனெனில் அது நடந்து பத்து வருடங்கள் கடந்து விட்டன. என்ருர்.

நானும் ஆவலுடன் ‘எங்கே நடந்தது? என்ன விஷயம்?’ என்றேன்.

‘சொல்கிறேன்’ என்று தொடர்ந்தார்.

∴ ∴

நான் அப்பொழுதுகொடை ரோட்டில் ஏட்டாகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன்.

அப்பொழுது நான் வேலைக்கு வந்து எட்டு வருடங்கள் இருக்கும்.

அப்பொழுது ஒரு நாள் காலை ஏதோ வேலை நிமித்தமாக கொடை ரோடில் இருந்து பக்கத்து ஊரான வெள்ளோட்டிற்குச் சென்றிருந்தேன். நான் சென்ற விஷயம் முடிந்து விட்டது. அதன் பின் நான் ஒரு வண்டியை பிடித்துக் கொண்டு கொடை ரோடிற்குத் திரும்பிக் கொண்டிருந்தேன்.

வண்டி சென்று கொண்டிருந்தது.

நான் எதேச்சையாக ‘என்னப்பா முனியா, இந்த ஊரில் ஏதாவது விஷயம் உண்டா?’ என்றேன்.

‘ஒன்றுமில்லீங்க எஜமான்’ என்ருன்.

அந்த வண்டிக்காரன்பெயர் தான் முனியன்.

அத்துடன் விடாது ‘ஆனல்’ என்று இழுத்தான்.

‘என்னப்பா ஆனல் என்ருய்?’ என்றேன்.

‘ஒன்றுமில்லை’ என்று மழுப்பினுன்.

‘சும்மா சொல்லப்பா’ என்றேன்.

‘சொல்லலாமா?’ என்ருன்.

‘ஏன்?’ என்றேன்.

‘பின் இந்த விஷயம் நான் தான் என்பது தெரிந்து விட்டால், என் உயிருக்கே ஆபத்து வந்து விடுமோ’ என்ருன்.

‘அதெல்லாம் ஒன்றும் வராது’ என்றேன்.

அதன் பின்தான் அவன் கூறினுன்.

‘இன்றிரவு கந்தமலைப் பகுதியில் சாராயம் காய்ச்சப்

(11ம் பக்கம் பார்க்க)

# பாரதீயக் கவிதைகள்

வா. கோ. பா.

காலத்தின் கண்ணாடியாக விளங்கும் இலக்கியம் தன்னைப் படைக்கிற சிற்பியின் தகுதி, திறமைகளுக்கேற்பவும் தன்னைச் சுமந்து செல்லும் மொழி வழியின் விளைவாகவும் வெவ்வேறு நிலை எய்துவது சகஜம். எனினும் எல்லோரும் கண்டும் கேட்டும் தொடர்ந்து சிந்திக்காமல் விட்டுவிடும் காட்சிகளின் அடிப்படையில் எண்ணக் கனலை மூட்டிப்பல்வேறு முனையிலுள்ள மக்களின் மனதைப் பண்படுத்தும் பணியில் இந்நிலவுலகின் கண்மணிகளான பல்வேறு மொழிக் கவிஞர்கள் தொடர்ந்து முனைந்துதான் வருகிருர்கள். இறைவனின் படைப்பில் குறை காணுவதையே தொழிலாகவும் கலையார்வமாகவும் கொள்ளாமல், கண் படைத்த பயனைக் கடவுள் படைத்த ஒவ்வொரு உயிர்க்கணுவிலும் கண்டு ரசிக்கும் சிறந்த பணியைத்தான் கவிஞர்கள் செய்து வருகிருர்கள். கவிஞரின் பணியைக் காலத்தைக்கொண்டு பகுப்பதும், பரம்பரை கண்டு பிரிப்பதும் அவ்வளவாகப் பொருந்தாதுதான். என்ருலும் இலையில் படைத்த அறுசுவையுண்டியை வரிசைப்படுத்தி பல்வேறு முறைகளில் பிரித்தும் சுவைப்பதைப்போலப் பாரதத்தாயின் அடிகளில் தூவிய கவிமார்களில் ஒரு சில வற்றை மொழி வாரியாகப் பிரித்தும், அந்தந்த மொழியில் அறிவும் அபிமானமுமுள்ள வாசகரின் கண்ணோட்டத்தில் மதிப்புக்குரிய கவிஞர்களின் அரிய சிருஷ்டிகளை அகில இந்திய ஆட்சி மொழியாக இயங்கத் துடித்துவரும் இந்தியில் நம் பாரத அரசாங்கம் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறது.

மொழி வழியில் நான் பிரிந்து சென்றுவிடும் பயத்திற்கிடமில்லை. எனினும் என் தாய்மொழி தமிழாதலின் முதலில் தமிழ்க் கவிதைகளைப் பற்றியேபேச விரும்புகிறேன்.

பத்துமாதஞ் சுமந்து பெற்றெடுத்துப் பாராட்டித் தாலாட்டும் தாய்மையை நாம் போற்றி வணங்குவோம்; ஆனல் எல்லாக் குழந்தைகளிடமும் சரிசமமாக அன்பு செலுத்தும் தாய் கிடைப்பது இன்று அரிதாகிவிட்டது, இந்த நிலையில் மாற்ருந் தாயிடம் பெற்ற பாசத்தை எதிர்பார்ப்பது பேதமைதானே! தனக்கென்ருெரு மகப்பேறில்லாத அன்னை மற்ருெருத்தி பெற்றெடுத்த மகவை வேண்டுமானல் தத்து எடுத்து வளர்க்கலாம். ஆனல் தன் உண்மை நிலையை எதிர்காலத்தில் அந்த மகன் உணர்த்த முற்படும் போது இல்லாமையின் விளைவாகத் தலைகாட்டிய போலித் தாய்மை இருந்த இடந்தெரியாமல் மறைந்து வெறுப்பும் அருவருப்புமே தலையெடுத்து நிற்கிறது. இதைக் குயில் பாட்டொன்றின் மூலமாகக் கவிஞர் கொத்தமங்கலம் சுப்பு விளக்கியிருக்கிருர்.

''தன்னுடைய பிள்ளை
யென்று
தானே வளர்த்து வந்து
அன்னமிட்ட செவிலித்தாய்
அடிக்க வரலாச்சுதையா''

எனும் அடிகளை

''அப்னு பச்சா ஸமஜ் முஜே
அப்னே ஹாதோம் பால்—
போஸ்கர்
கிலானே—பிலானே வாலீ
தாயீ
மார்னே தௌடீ முஜே தபீ''

எனும் மொழி பெயர்ப்பு உணர்ச்சி கொப்புளிக்க மனதில் பதிய வைக்கிறது.

''குற்றமொன்றும் செய்
தறியேன்
குயிலாய்ப் பிறந்ததன்றி
உத்தமரை நாதியின்றி
உலகமெல்லாம் அலைகின்
றேன்''

என்று குயில் கூக்குரலிடுவதைக் கேட்டால் யார் மனம் இளகாது?

மண், நீர், வளி, யொளி, வெளி, எனும் பஞ்சபூதங்களும் கூட்டுறவு கொள்வதும் பிணங்குவதுமே உலக மக்களின் பிறப்பு. இறப்பின் ரகசியம். இந்தக் கூட்டுறவின் மேல் அடிக்கடி நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வருவதே ஞானிகளின் சிறந்த பணியாகக் கருதப்படுகிறது.

''அப்பா! உன் வசமிருக்கும் மாம்பழங்கள் அழுகிவிடப் போகின்றன!—உனக்குவேண்டிய மட்டும் சாப்பிடு—மற்றவைகளைப் பசித்து நின்முகம் நோக்கும் மற்ற மக்களுக்குக் கொடுத்துதவு'' என்று நயந்து கேட்பது ஒருவிதம்.

''அத்தனை பழமும் உனக்கோ! அவ்வளவும் உன் வயத்திலா கொட்டிக்கொள்ளப் போகிறே!'' என்று சாபம் கொடுப்பதுபோல் மிரட்டிக் கேட்பது மற்ருெரு விதம்.

''பழங்கள் அழுகிவிடக்கூடியவை. பசிப்பிணி அடியோடு தீர்ந்துவிடக்கூடிய ஒன்றல்ல'' என்று பட்டும் படாமலும் சொல்வது மற்ருெரு விதம்.

எந்த விதமாய் பிரசாரம் செய்தாலும் இந்த மண்ணின் மீது மனிதன் கொண்டாடும் உரிமை வெறியைத் தெளிய வைக்க வேண்டுமென்பது தான் பூதான யக்ஞத்தைத் தொடங்கிய விநோபாபாவேயின் கருத்து. சொல்லப் போனல் இந்தப் பூதான யக்ஞத்தை முன்பே தொடங்கிய புத்திசாலித்தனம் வாமனவதாரத் தோன்றலான நாரணனுக்குண்டு. தன் தலையே போனலும் சரி என்று அந்த வேள்வியில் ஆத்மதானம் செய்த பெருமை பலிச்சக்கரவர்த்திக்கு உண்டு.

''மண்ணேது பொருளேது
மானிடர்க்கு உடலேது—
கண்ணன் நான் தந்த
தன்ருே!—கேட்கிறேன்
கொடுத்துதவு—''

என்று மாயக்கண்ணன் குரல் கொடுத்தால் மயங்காதார் யார்? தன் உடல் பொருள் ஆவியனைத்தையுமே கொடுத்துவிடமாட்டார்களா?

''உலகிலுள்ள நிலமனைத்
தும்
உலகநாதன் உடைமையே
ஊரிலுள்ள விளைநிலங்கள்
ஊர்ப்பொதுவாம் கட
மையே''

என்ற நாமக்கல் கவிஞரின் குரல் ஏட்டோடு மட்டும் நிற்கவில்லை—நாட்டின் சந்து பொந்துகளிலெல்லாம் எதிரொலிக்கிறது. ஏட்டில்—அகில இந்தியத் தொடர்பும் கொண்டிருக்கிறது.

(தொடரும்)

சென்றவாரத் தொடர்ச்சி

# வெள்ளிக்கிழமை

(கி. கோவிந்தராஜன் கரூர்)

'ஏம்மா இன்னும் உட்கார்ந்து இருக்கே! ஒரு பாட்டு பாடப்படாதோ! நீ என்ன பெரிய பாடகியா என்ன? எதைப் பாடறதுன்னு யோசனை பண்ண!' அம்மா— இல்லை—'சித்தி' குத்திக் காட்டினுள்....

ஆம்; இதுவரை அம்மா என்று உங்களுக்கு அறிமுகம் செய்துவிட்டேனே —அவள்— என்னை பத்து மாதம் சுமந்து பெற்ற அம்மா இல்லைதான்— பின்னே என்ன என்பீர்கள்— அவள் என் தந்தைக்கு இரண்டாம் முறை வாழ்க்கைப்பட்டவள்—என் சித்திதான். ஆனலும் இளம் குழந்தைப்பருவம் முதல் அவளைதான் அம்மா வென்றே அழைத்து வந்தபடியால் உங்களுக்கும் அப்படியே சொல்லிவிட்டேன்...

மணல் மூட்டைகளை போட்டுத் தடுத்து அணைகட்டிய வெள்ளமேட்டில். துணி தைக்கும் கோணி ஊசி போட்டு கிழித்துவிடுவதுபோல், அவள் என் உள்ளத்து அணையை கீறிவிட்டாள்...எங்கோ பட்டும் படாததுமாக அவள் கேள்வி என்மேல் உரசியும்— உராயாமலும் பாய்ந்து ஓடிற்று.

என மனம் மட்டும்—என் வாழ்வில் நான் கண்டு அனுபவித்த எத்தனையோ வெள்ளிக்கிழமைகளைக் காண துடித்துக் கொண்டிருந்தது ...

"என் தந்தை என் சித்தியை—கைப் பிடிக்கும்போது என் வயது நான்காம்...எனக்கு என்னவோ அரை குறையாக மரப்பாச்சி பொம்மை விளையாட்டு ஞாபகம் தான் இருந்தது." அப்போது....

என்னைப் படிக்க வைத்து பெரியவளாக வளர்த்து பள்ளிக்கு அனுப்பும்போது ஒரு நாள்—என் தந்தை சொன்னர். 'லெக்ஷ்மி உனக்கு வயது பனிரெண்டு ஆகிவிட்டது. நீ பெரியவளாக ஆகிவிட்டாய்.... உன்னை இனி வெளியே அனுப்ப என் மனம் இடம் தரவில்லை....நாளை வெள்ளிக்கிழமை உனக்கு ஒரு வரன் பார்க்கப் போகிறேன்....உன் சம்மதம் என்ன?' என்றார்..

பாவாடையை ஆலாவட்டமாக ஒரு சுற்று சுற்றுவிட்டுக் கொண்டே சுழன்ற நான் 'போங்கப்பா..எனக்கு அதற்குள் கல்யாணமா...' என்று வெட்கித் தலைகுனிந்தபடியே வேடிக்கையாக ஓடினது மட்டும்தான் இப்போது எனக்கு ஞாபகம் வருகிறது...

அதையே அவர் என் விருப்பமாக கொண்டாரோ என்னவோ? அவ்வளவு தூரம் ஆராய்ந்து பார்க்கும் வயதை எட்டவில்லை நான் அப்போது...

அதற்கு அடுத்த வெள்ளிக்கிழமை எங்கள் ஊர் முருகன் கோயிலில் என்னை கைகழுவி விட்டார் என் அப்பா? என்ன சொன்னேன்....கை கழுவினர் என்ரு? இல்லை....இல்லை. தன் பெண் என்ற பொருப்பில் இருந்து வேறொருவரின் மனைவியென்ற பதவிக்கு என்னை மாற்றிக் கொடுத்துவிட்டார்....என் சின்னம்மாவின்பிடிவாதமான தொந்தரவினல்—

என் கல்யாணதினமும்.... முருகனை கோயில்கொண்டிருக்கும் அந்த வள்ளி மணாளனின் திருக்கல்யாண உத்சவ தினமும் ஒன்ருக இருந்தது மட்டும் என் நினைவில் அப்படியே பசுமையாக இருக்கிறது ....அன்று அந்த வேலனின் திவ்ய தரிசனம் என் வாழ்வை வெற்றிகரமாக ஆக்கிவிட்டதாகத்தான் அன்றுநான் நினைத்தேன்.

சூரர்களை அழித்து தேவர்களுக்கு அடைக்கலம் தந்த அந்த திவ்யன், நமக்கும் சித்தியின் பிடியில் இருந்து நீக்கி விடுதலை அளித்துவிட்டதாகத் தான் கருணைகொண்டேன் நான்...ஆனல்....?

ஆனல் என்ன? விதியென்று சொல்வார்களே அது யாரை விட்டது..

இருபது ரூபாயில் முடிய வேண்டிய என் கல்யாணம் 'ஜாம் ஜாம்'மென்று இருபதாயிரம் ரூபாயில் அமர்க்களமாக நடந்தது.

என் தந்தையின் பெரிய வியாபாரத் தன்மைக்கேற்ப சம்பந்தமும் பெரிய இடம் தான்....

என் கணவர்... ஆம்! அவர் முகமண்டலத்தை நான் எவ்வாறு வர்ணிப்பேன்..

என் திருமணக்கோலத்தில் தான் நான் அவரை முதல் முதலாகப் பார்த்தது...அதுவே கடைசியாகவும் இருக்கும் என்பதை எப்படி என்னல் உணர முடியும்?

வைரங்களால் பூட்டி அலங்கரிக்கப்பட்டிருந்த என் பொன்னுடல், அவர் தீண்டுதலுக்கு இறையாகாமலே இருந்துவிடும் என்று அப்போது நான் கண்டேனு என்ன?

கல்யாணக்கோலம் முடிந்து ஒருவாரம் ஓடிவிட்ட அந்த காலம் மிகவும் பொல்லாதது. என்னை எப்படி எப்படியெல்லாம் ஆட்டி வைத்துவிட்டது....

இரவென்றும், பகலென்றும் தொயாமல் அவர் இருக்கும் அறைக்குள் ஓடினேன். புதுமணத் தம்பதிகளான எங்கள் வாழ்வில் வசந்தம் மலர் மழை பொழிந்தது. மாறன் மலர அம்பேந்தி என் இருதயத்தை குறி பார்த்து சுட்டான்....ஆனல்....அவர்...?

'அவர் ஒரு அப்பாவி! தாய் தந்தைக்குப் பயந்து என்னைத் தீண்டவும் பயந்தார்..'

நெருப்புக்கனல் பறக்கும் அவர் தந்தையின் குரல்— அன்று—நான் அவர் உள்ளே இருக்கும்போது கேட்டது இன்னமும் என் நெஞ்சத்தில் பதிந்து கிடக்கிறது.

'சாந்தியாம்! .... சாந்தி....!!' அது முடியும்வரை நானும் அவரும் உறவாடக்கூடாதாம்! என்ன நீதி!!

ஆம்! அந்த நீதியின் பெயரைச் சொல்லத்தான் அவர் என் தந்தையிடம் இருந்து 'பணம்' பிடுங்க முஸ்தீபு இட்டு இருந்தார்...! ஆனல் மனிதன் எண்ணுவதுபோல் எல்லாம் நடந்தால்தானே!

மணக்கோலத்தில் கண்ட என் மணளனை என் ஆசைத் தீபத்தை—அன்று—அந்த அறையின் நடுவே கண்டது தான்...! இன்னமும் காணப் போகிறேன் பாபி!

(தொடரும்)

(8ம் பக்கத் தொடர்ச்சி)

போகிறுர்கள்' என்ருன்.

'எப்படித் தெரியும்?' என்றேன்,

'சாராயம் காய்ச்சுபவர்களில் ஒருவர் இதை என்னிடம் கூறிவிட்டு என்னையும் அழைத்தார்.' என்ருன். கூறிவிட்டு 'எனக்கு இதனல் ஏதாவது ஆபத்து வருமா என்ருன்.

'ஒன்றும் ஆபத்து வராது' என்று அவனுக்குத் தைரியம் சொல்லிவிட்டு கொடை ரோடிற்குச் வந்து சப்இன்ஸ்பெக்டரிடம் விஷயத்தைக் கூறினேன்.

அன்று இரவு மணி ஏழு இருக்கும். எங்கும் கரிய இருட்டு நானும் இன்னும் ஐந்தாறு பேரும் சப்இன்ஸ்பெக்டரும் போலீஸ் வானில் முனியன் சொன்ன இடத்திற்கு சென்ருேம். குறிப்பிட்ட இடத்தில் வண்டி நிறுத்தப்பட்டது.

அந்த இடத்தை பார்க்கும் பொழுது எங்களுக்கே திகில் உண்டாயிற்று. அந்த கரிய இருட்டில், ஜன சந்தடி இல்லாத இடத்தில் அவர்கள் எப்படித்தான் தனியாய் இருக்கின்ருர்களோ என்று எண்ணும்படியாயிற்று. அந்த இடத்தை போலீஸ் ஜவான்கள் வளைத்துக் கொண்டனர். நானும், சப்இன்ஸ்பெக்டரும் இரண்டு மூன்று ஜவான்களுடன் உள்ளே சென்ருேம்.

உள்ளே ஐந்தாறு நபர்கள் நன்ருக குடித்துவிட்டு குடி மயக்கத்தில் இருந்தனர். அந்த இடத்தைச் சுற்றி சாராய வாடை அடித்துக் கொண்டிருந்தது. நாங்கள் எல்லோரையும் விலங்கிட்டு ஸ்டேஷனுக்கு அ[illegible]ழைத்து வந்தோம்.

உள்ளே நுழைந்ததும் விளக்கொளியில் அந்த நபர்களை நோக்கினேம். அதில் ஒரு நபர் கொலையாளி, போலீஸால் தேடப்பட்டவன். உடனே சப்இன்ஸ்பெக்டர் என்னை நோக்கினர். அவர் பார்வையில் ஆச்சரியம் கலந்திருந்தது.

'என்ன ராஜ் பார்த்தாயா? உன்னுல்தான் இந்தக் கொலையாளி பிடிபட்டான்.' என்ருர். என்னைப் பாராட்டினர்.

அவர்களை காவலில் வைக்கப்பட்டது, மறுநாட்காலை அந்த நபர்களை பார்ப்பதற்காக சென்றிருந்தேன். அப்பொழுது அந்தக் கொலைக் குற்றவாளி மட்டிலும் தனி அறையில் அடைக்கப்பட்டிருந்தான். நான் அவனை நோக்கினேன். அவன் பெயர் வேலப்பன் என்பதை பின்புதான் உணர்ந்தேன்.

என்னை அழைத்தான்.

'என்னப்பா'? என்றேன்,

'எஜமான்' என்று கூறிக் கொண்டே என் கால்களில் விழுந்து என் காலை இறுகப் பற்றிக் கொண்டான்.

எனக்கு அவன்மேல் சந்தேகம் வந்து விட்டது. அவன் தப்புவதற்கு வழி செய்கிருன் என்று எண்ணமுற்பட்டேன். முன்னெச்சரிக்கையாக காவலாளிகளை கண் ஜாடைகாட்டி உஷார் படுத்தினேன். ஆனல் எதிர் பார்த்ததுபோல் ஒன்றும்நடக்கவில்லை.

அவனை எழுந்திருக்கச் செய்தேன்

'என்ன விஷயம்?' என்றேன் அவனை நோக்கி, அவன் அழ ஆரம்பித்து விட்டான். அவனை சமாதானப் படுத்துவதற்குள் போதும் போதும் என்ருகி விட்டது. முடிவில் விஷயத்தை கூறினன்.

'நான் கொலை செய்து விட்டேன். அதுவும் போலீசிற்கு தெரிந்து விட்டது. நான் தலை மறைவானேன். ஆனல் விதி என்னை காட்டிக் கொடுத்து விட்டது. அது என்னுடைய துர் அதிர்ஷ்டம். நேற்று வாழ்ந்தவன் இன்று வாழ்கின்ருனு? அல்லது இன்று வாழ்ந்தவன் நாளை வாழப் போகின்ருன் என்பது என்ன நிச்சயம்? அதனல் என் உயிர் போவதைப்பற்றி எனக்கு ஒன்றும் ஆக்ஷேபணை இல்லை. என் மகள் தாயற்றவள் உதவியின்றி தவிப்பவள். அந்தக் குழந்தையை வைத்து சம்ரக்ஷிப்பதற்கு அருகதை இல்லாதவனுகி விட்டேன் நான். என் உயிர் போவதோ நிச்சயம். ஆதலால் என் ஒரே மகளை வாழ வைப்பது உங்கள் கடமை' என்று கூறிவிட்டு மறுமுறையும் கண்ணீர் விடத் தொடங்கினுன்.

என்னை உற்று நோக்கினுன் அந்தப் பார்வையில் தாபம் குடி கொண்டிருந்தது. என்னிடம் எதையோ எதிர் பார்ப்பது போன்ற தோற்றம்.

நான் வெகு நேரம் யோசித்தேன்.

'என்ன எஜமான் யோசிக்கின்றீர்கள்?' என்ருன்.

அவன் நிலையைக் கேட்டதும் என் மனதில் இரக்கம் குடி கொண்டது. அவனுடைய வேண்டுகோளுக்கு ஒப்புக் கொண்டேன். அவன் கண்களில் ஆச்சரியமும் நன்றியும் கலந்திருந்தன.

'கவலைப்படாதே வேலப்பா உன் மகளை வாழ வைப்பது என் கடமை' என்றேன்.

நான் அவன் கூறிய இடத்திற்கு சென்று நோக்கினேன். அவன் பெண் இருந்தாள். அவள் வயது பத்துதான் இருக்கும். அழுது அழுது முகமெல்லாம் வீங்கி இருந்தது. நான் அவளுக்கு ஆறுதல் கூறி என்னுடன் அழைத்து வந்தேன்.

இரண்டு தினங்கள் கழித்து சப்இன்ஸ்பெக்டர் என்னை அழைத்து உன்னை திருச்சிக்கு சப்இன்ஸ்பெக்டராக போட்டிருக்கிருர்கள் பிரமோஷன் ஆகியிருக்கிறது என்ருர்.

நான் அந்தப் பெண்ணையும் அழைத்துக் கொண்டு திருச்சிக்கு வந்தேன். இன்றுவரை என்னிடம்தான் இருக்கிருள்.

∴ ∴ ∴

'என்ன சார் இதைப்பற்றி என்னிடம் இதுவரை பேசியது இல்லையே!'

'இதெல்லாம் என்னபெரிய விஷயம் சார்!'எனக்கு அந்தக் கொலையாளியின் மகளைக் காண வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. எப்படிச் சொல்வது?

(12ம் பக்கம் பார்க்க)

குளித்தலை டி. மு. கோர்ட்
S. C. 177/57

பொன்னுசாமி கவுண்டர்
—வாதி
பொன்னம்பல கவுண்டர்
—பிரதிவாதி

வாதி 1953–54 ஷூ உங்கள் குத்தகை பாக்கி ரூ. 100க்கும் வாதிக்கு பிரதிவாதி எழுதிக் கொடுத்திருக்கும் புரோநோட்டுப்படி ரூ. 139—4—0 ஆகரூ. 239–4–0 க்கு செய்திருக்கும் தாவா 3—6—57ல் வாய்தா போடப் பட்டிருக்கிறது.

எஸ். அண்ணுத்துரை
அய்யங்கார்
வாதி வக்கீல்

(2ம் பக்கத் தொடர்ச்சி)

பொன்னும் புகழும் ஆடுகின்ற கண்ணுமூச்சிக்குள் சிக்காத மனிதன் இல்லை.

காலமென்னும் மலைமேலே, இன்றைய வாழ்வில் அற்பமான மனிதர்கள் புகழ்க்குன்றத்தின்மீது ஏறிக்கொண்டிருப்பார்கள்; இன்றைய பிரமுகர்கள் பணக்கார புகழ்ச்செல்வர்கள் படிப்படியாக இறங்கிக் கொண்டிருப்பார்கள். பொன்னின் துணையில்லா புகழ்ச் செல்வர்கள் கலைஞர்கள், விஞ்ஞானிகள் சமூகத் தொண்டர்கள் மேலே மேலே நிலையான இடத்துப் போய்க் கொண்டிருப்பதுதான் உலக தத்துவம்; ஊழிஊழியாக நடைபெறும் அலகிலா விளையாட்டு.

(3ம் பக்கத் தொடர்ச்சி)

ஆனால் நமது திருச்சிஜில்லா மட்டும் முன்னேற்றம் எவ்வகையிலும் ஈடுபடாதது மட்டும் அல்ல, பிற்போக்காகவும் போய்க்கொண்டு வருகிறது. இதை உணர்ந்து வேண்டுவன செய்ய வியாபாரிகளாகிய நம்மிடம் வகை ஏதும் இல்லையா என்று நாம் கவனித்தல் நலம்.

சகோதரர்களே! நமது வியாபாரத்தின் முற்போக்கையும் கவனித்துக்கொண்டு, வேறு எந்த வகையிலும் நம் நாடு முன்னேற நம்மால் ஆனதுசெய்ய இருக்கும்வகையை, நாம் ஒவ்வொருவரும் கவனித்தால், அதன்முக்கிய அம்சம் நம்முள் ஒற்றுமை என்று நான் சொல்லத் தேவையில்லை. எனக்கு அளித்த கௌரவத்திற்கு மறுபடியும் நன்றி பாராட்டி, என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

11ம் பக்கத் தொடர்ச்சி)

மறுதினம் அவரை அலுவல் நிமித்தம் காணச் சென்றிருந்தேன். அப்பொழுது இன்ஸ்பெக்டர் ராஜ், 'கனகம்' என்று குரல் கொடுத்தார். ஒரு பெண் உள்ளே இருந்து வந்தாள்.

'இவள் தான் சார் அவள். இப்பொழுது காலேஜில் படித்துக் கொண்டிருக்கிருள். டாக்டராகப் போகிருளாம்' என்று கூறிவிட்டு அவளை நோக்கினர். அவள் நாணத்தால் தலை குனிந்து கொண்டு உள்ளே சென்று விட்டாள்.

(12ம் பக்கத் தொடர்ச்சி)

தராசு சிறிதுநேரம் சிந்தனையிலாழ்ந்தது.

'தம்பீ, கணபதி, வீட்டிற்குள் திருடன் வந்துவிட்டானுல், சகோதரர்கள் தங்கள் பகைமையை மறந்து அவனை விரட்டத் தடியை எடுத்துக் கொள்ளுவார்கள், அவர்களிடையே ஒரு தாற்காலிக ஒற்றுமை எற்பட்டுவிடும். அந்தச் சக்தியைத் தூண்டப் பிரமாதமான தவ வலிமை தேவையில்லை. ஆனால் உள்பகையை வெல்லும்படி செய்ய மகத்தான சக்தி தேவை. ஏனெனில் நமக்குள் பகையிருக்கும் விவரமே நமக்குத் தெரியாது. அதை உணரும்படி செய்து, அந்தத் தீய சக்திகளை ஓரளவு வெல்லுவதற்கான சக்தியைப் பூஜ்யர் அளித்து வருகிருர். சிந்தனைப் பாதையைச் சீரிய வழியில் திருப்ப முயலுகிருர். ஆகவே அவரைக் குறைகூறிப் பயனில்லை. அவர் எடுத்துக்கொண்டிருக்கும் பணி மிகவும் பளுவுடையது.'

'நீ சொல்வது எனக்குப் புரிகிறது தராசே. நான் உன் கூற்றை ஏற்றுக்கொள்ளுகிறேன்,' என்று கூறினன் கணபதி.

'கணபதிராயா, நீ காலடியில் என்ன கண்டாய்'?

'இப்போதே சொல்லவேண்டுமா தராசே!'

'ஏன், அவகாசமில்லையா?'

அதற்கில்லை, நான் காலடியில் கண்டவை இருவகைக் காட்சிகள். ஒன்றைக் கண்ணைத் திறந்துகொண்டே பார்த்தேன். மற்றதைக் கண்ணை மூடிக்கொண்டு கண்டேன். அவைகளைக் குறித்துக்கூற இன்னும் கொஞ்சம் தபஸ் தேவை.

அப்படியே செய், மறுபடி வரும்போது சொல்வேன்.

தெண்டனிட்டு வணங்கினன் கணபதிராயன், பாடிக்கொண்டே நடந்து சென்ருன்.

சித்தாந்தச்சாமி திருக்
கோவில் வாயிலில்
தீபவொளியுண்டாம்
—பெண்ணே
முத்தாந்தவீதி
முழுதையும் காட்டிட
மூண்ட திருச்சுடராம்—
பெண்ணே—மூண்ட
திருச்சுடராம்!
ஒலிமெல்ல, மெல்லக்
கரைந்து
காற்றை நிரப்பிற்று.



### படத்தொழிலுக்கு சைனுவில் பூரண சுதந்திரம்!

சில சினிமாத் தொழிலுக்கு அந்த அரசாங்கத்தில் பூரண சுதந்திரமளிக்கப் பட்டிருக்கிறது. ஸ்டுடியோக்களில் தயாரிப்பாளர்களுக்கு பூரண சுதந்திரமும். அவர்களுக்கு அவரவர்கள் தங்கள் சொந்தமாக திரைக் கதைகளைத் தேர்ந்தெடுக்கவும், பொறுத்தமான நடிக நடிகைகளை போட்டுக் கொள்ளவும், அரசாங்கத்தாரால் ஒதுக்கப்பட்டிருக்கும் நிதியை தேவையான அளவு வாங்கிப் பயன்படுத்திக்கொள்ளவும் எந்த நிபந்தனையுமில்லாது உரிமை வழங்கப்பட்டிருக்கிறது.



Edited and Published by Thiruloka Sitharam for the Shivaji Private Ltd and Printed by A. V. R. Krishnasami at Kannan Press, Tiruchi-2